ருந்தார், னிருடி மார்கண்மேற் சுமந்துவ னேதினு லெ
ன்னின், மருவு மங்கவர் சடிலமே சுமடதாம் வழக்
கால். (௫)

செம்ப னென்பவன் கொடுமையை யிமையவர் திர
ண்டு,கும்ப மால்வரை யிந்திரன் றன்னொடு கூற, வம்ப
ருமலர்த் தருநிழற் பொருந்திய மகவா, னம்பு ராசியிற்
றுயில்பவற் கவைமெலா மறைந்தான். (௬)

இந்த வாசகங் கேட்டலு நெடியவ னிசைப்பான், சிந்
தி யாதுசெல் படைத்துணை யாகயாஞ் செல்வா, முந்தி
யேகென வுரைத்தனன் புள்ப்புழை முகந்துந், தந்தி
வாகனந் தேறினன் சதமகன் சமர்க்கு. (௭)

போத காதிக ளுடனிவ னெழுந்தனன் பொருதற்,
கோதி னாவன் வர்வெரா மவுணனுங் கொற்றர், தீதுகா
லமே யிவர்க்கெனக் கனன்றுகண் சிவந்து, யாது தான
வர தானவர் கணத்தொடு மெழுந்தான். (௮)

குந்த மூவிலைச் சூலம்வா ளோமரங் குனிவில், பந்தி
யாகவே நடந்தன தொடர்ந்தன பரித்தேர், தந்தி யாறி
ந ணொருங்கின பதாகையின் சால், நந்து காகள முரசு
வான் முழவிவை நான்ற. (௯)

கடலி ரண்டுபோ லிருவர்தம் படைகளுங் கலந்த
புடவி நீடுயிர்ப் பொழுதுக ளௌனத்துகள் பொலிந்த
வடலை யாயின வுலகமற் றமரரு மங்கைப்
படையெ லாமிழந் தேகினு ரிந்திரன் பார்த்தான். (௰)

வான வர்க்கிறை வச்சிர மாகிய மலையைத்
தான வக்கட லளறுபட் டலேவுறச் சலித்தா
ஞன வக்கடல் கொடுத்தது நிணப்பெய ரமிர்தஞ்
சேன மற்றுள வலகையா மிமைப்பவர் தெவிட்ட. (௰௧)

செம்ப னென்பவ னும்பர்கோன் களிற்றெதிர் திரு
மபிக்,கம்ப மால்களிற றுச்சிமேற் புடைத்தனன் கதை
யா, லம்பு ராசிநேர் கருநிறத் தவுணன்மே லாக, வும்
பர் நாயக னழுந்தினுன் வச்சிரா யுதமே. (௰௨)

வச்சி ரத்தனைப் பறிந்தெறிந் தெழுந்தெதிர மலேந்து
முச்சி ரத்துவே லெறிந்தன னிந்திரன் முகத்தின்
மெய்ச்சி ரந்தினிற் கதையினுற புடைத்தனன் விழுந்
பச்சி ரத்தமேற் பறந்தன விந்தன பரவை. [தான்

அச்ச மாகிய விந்திரன் றுயரொலா மகற்றிப்
பச்சை மாயனும் படைகளும் வரங்களும் பலித்தான்
வச்சி ராயுதன் செம்பனை வருகென மலைந்திட்
டுச்சி வேரறப் பறித்துவெம் பகையெலாமொழித்தான்

கலிவிருத்தம்.

தானவ ரொனுங்களை தவிர்ந்து போனபின்
வானவ ரொனும்பயிர் வளர்ச்சி யாகிய
வூனமி லிந்திரற் குள்ள மீதிலே
ஞானம்வந் தனுமுதற் பழிக்கு நாணியே. (௰௫)

வாசவ னிப்படி வருந்து நாளிலே
தேசிகன் குறுகியோர் தெளிவு கூறுவா

ஞசமி றெக்கண கயிலை நாதனைப்
பூசனை புரியினவ் பொடிபட் டேகுமே. (மிரு)

அறுசீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்.

என்று மொழிந்தா னிந்திரனு மிமையோர் குரு
வின் மெய்ம்மொழியாற், சென்று கயிலைச் சிவதடந் தீர
டிநந்தா னிறையைச் சேவித்தான், குன்றி னிகராய
வருவினையுங் குன்றியெனவே குன்றியதா, லொன்றுபு
தலாத நாயகனை நல்பொன்போ லிலையென் றறிந்தனை
மே. (மிஎ)

கலி விருத்தம்

நாள்ளிய செம்பனைத் தொலைத்த வான்பழி
தன்னுவான் பொன்றுறைத் திட்ட தன்மையால
வள்ளலைத் திரிசிரா மலையிற் போற்றினான்,
வெள்ளிவெண கயிலையான் விடையிற் றோன்றினான்.
பொரும்பழி நீக்கினோம் வினையும போக்கினோம்
விரும்பிய தளித்திட விளம்பு கென்றன
னிரங்கியிம் மலைதொழு மெவர்க்கு மக்கணந
தரக்கைதயும் பாவமு மகல வேண்டுமே. (மிஅ)

மன்னியிற் பூசனை கலந்ததாளிலே
மன்னிய சிவதட வனத்தின் மூழ்கியே
துன்னிய துரோணவெண் மலரைச் சூட்டிவா
ரந்திலை சிவகதி யடைய வேண்டுமே. (உ0)

இப்படி யிந்திர னியம்பி யேத்தினு
னப்படி யாகவென் றரனுங் கூறினன்

மைப்படர் கயிலைமால் வரையி னீங்கியே
கைப்படை யிந்திரன் களிற்றிற் போயினான்(உக)

இந்திரச்சருக்க முற்றிற்று.

ஆக சருக்கம் ச-க்கு திருவிருத்தம்—ஙஎச.

# தீர்த்தச்சருக்கம்.

கலிவிருத்தம்.

நோதம னிந்திரன் கதை நயைக் கூறலு
மாதவ ரனைவரும் வணங்கி வாழ்த்தியே
பூதர குமரியப் பொருப்பி லெய்திய
தியாதுகொ லெனமுனி யியம்பன் மேயினான்(க)

முக்கணன் றனையுமை முன்னொர் நாளிலே
மிக்கதெவ் வரையெனத் தனிவி னவினா
ணக்கனு மிறைவியே நடவி னெய்திய
தெக்கண கயிலையே சிறப்பென் றோதினான். (உ)

அன்னவா சகஞ்சொல விரும்பி யம்பிகை
யென்னகா ரணமதோ வியம்ப நீங்கியே
புன்னைமா மலர்ப்பொடி பொதிந்த பொன்மலை
வன்னமாந் திரிசிரா மலையை மேவினாள். (ங)

விருப்பினு லவ்விடை முழுக வேண்டியே
பொருப்பெலாந் தேடினுள் பொய்கை காண்கிலா
ளருப்புலா முலையவ ளதனை வேண்டியே
பருப்பதா லயன்றிரு பாதம் போற்றினுள். (சு)

வெங்கரா சலவுரி தரித்து வெண்பொடி
யங்கரா கமதென வணிந்து வெண்மதி
பொங்கரா முடிமிசைப் புனைந்த புங்கவா
சங்கரா விதனிடைத் தருக தீர்த்தமே.

வச்சுதா நந்தனுந் தரிய வண்ணலே
விச்சையாய் நாதமாய் விந்து வாகிய
சச்சிதா நந்தனே தருக தீர்த்தமே. (சா)

ஆதியா னவனரு ளான வாணியா
ளோதுவான் கங்கைநீ ருனக்கு வேண்டிய
தேதுகா ரணமென விறைவி மூழ்கி யான்
போதினு லருச்சனை புரிய வென்றனள். (எ)

நந்தன மெனச்சொலிச் சடையிற் கங்கையை
யந்தர மிசையினும் விடுக்க வந்நதி
யுந்திய கடலெலா மூர்வ தாமென
வந்தது பிரளய வனம தாகவே. (அ)

சங்கென மிதந்தனன் சலத்திற் சந்திரன்
வெங்கதிர் பங்கயம் போல மேவிய

தங்குள வரையெலாங் கமட மாயின
மங்குலுஞ் சைவல வனங்க ளானவே. (௯)

உலகெலாந் தெரிவுற வூழி காலமென்
றலகிலா வுயிர்களு நடுங்க வாயிரந்
தலையரா வசைவுறத் தருகட் டவிழிக்
குலமதா சலம்விழ வதுகு தித்ததே. (௰)

மண்ணிடை யதுவரும் வரவி னுறுதீற
கண்ணினன் மணிவிழிக் கடைசி வந்தது
பெண்ணியல் கங்கையும் பெரிது மஞ்சியே
புண்ணிய தீர்த்தமாய்ப் பொருப்பை யுற்றதே.

அங்கது வடதிசை யருகிலேசிவ
நங்கையென் றொருபெயர் காணநின்றது
பொங்குமத் தடத்திலோர் புறத்தி லேசிவ
சங்கரன் றோன்றினன் சயம்பு வாகவே. (௰௨)

நந்துறை தடத்திலே நவ்வி மூழ்கினண்
மந்தர கிரிதொழும் வரையின் மேவினள்
சந்தத மிபபடித் தவஞ்செய் நாளிலோ
ரந்தணன் போலவே யமலன் றோன்றினன். ()

வெள்ளிய பஞ்சினும் விளர்த்த குஞ்சியன்
றள்ளிய நடையினன் றளர்ந்து கோலின
னள்ளிய மூப்பின னழகு மேனியன்
றுள்ளிய வெயரின னுகிச் சொல்லுவான். (௰௪)

அனிச்சமுந் திறையிடு மழகு மேனியுந்
தனற்செறி தவந்தினாற் கருக வேண்டுமோ
நினைந்தது தருகுவா னிமல னித்தவந்
தனிச்சிலை நுதலியே தவிர்க வென்றனன். (௩௫)

ஓதிமந் தவத்தினை யொழிந்து சிந்தையில்
வேதிய னருச்சனை புரிதல் வேண்டினாள்
கோதற மாலினி குறிப்பி னல்கினாள்
சோதியு மறைந்தபின் விடையிற் றோன்றினான்.

எற்றினா னெதிர்நடந் திறைவி யெய்தினா
போற்றினா ளருந்தவம் புரிந்த வெந்தையை
யாற்றினன் றிருமுடி யைந்தி னான்மதிக்
கீற்றினனவளுடன் கிளத்த லாயினான். (௩௭)

பொருசிலை நுதலியே புகன்ற யாவையுந்
தருகுவ முனையெனச் சயில்நாயகி
யுரைசெயு மித்தலத் துள்ள யாவையு
மருவுமென் பெயரினால் வழங்க வேண்டுமே.

ஆதியே யிறுதியே யாதி பூரமென்
றோதிய நாளிலே நவமி யோங்கினாற்
றீதற வேவலுஞ் செய்த பேர்க்கெலாஞ்
சோதியே நல்வரஞ் சொரிதல் வேண்டுமே. (௩௯)

பூமழை யிமையவர் பொழிந்து போற்றினார்
மாமலர் முடிமிசை மணத்தை வீசிய

தேமலி மடந்தையைத் தெய்வ நாயகன்
கோமள மட்டுவார் குழலி யென்றனன். (௨௰)

விடைமிசை யுலவிய விமல னூர்தரு
திடமிசை யிருந்தன ளிமய நாயகி
சடைமிசை யிறங்கிய தூம நாயகி
கடலென வொருசிவ கங்கை யாயினள். (௨௧)

ஒருதுளி பருகின னுடலி னோயறு
மிருதுளி பருகினார்க் கின்மை யின்மையா
மருளுடன் றுளிகண்மூன் றருந்தி னைவரா
கருதிய பொருளெலாங் கரத்திற் கூடுமே. (௨௨)

சிவநதி யெனச்சொலிற் றேவ ராகுவர்
சிவநதி சிவநதி யென்று செப்பினாற்
பவமறும் பலபடப் பகர்ந்த பேர்க்கெலா
மவனியிற் பரகதி யடைத லாகுமே. (௨௩)

தடத்தினை வலஞ்செய்வார் தம்மை வானுல
கிடத்தினில் வலஞ்செய்வா ரிந்தி ராதிய
ரடுத்ததின் மூழ்கியவ் வமிர்தங் கொண்டபேர்
விடத்தினை யருந்திய விமல னாவரே. (௨௪)

அத்தட மூழ்கினார்க் கலகை நோயற
மெத்திய பகையற வினையின் வேரறப்
புத்திர செல்வமும் புகழும் வீரமுஞ்
சித்தியு முத்தியுஞ் சேர்த றிண்ணமே. (௨௫)

நீணிலம் புகழுமந் தீரின் மூழ்கினு
ணாணவ மெனுமுயி ரழுக்க நீங்கிடும்
பாணியி னுருதுளி பயங்கொண் டார்தமைக்
காணலும் பயங்கொளுங் கடிய காலனே. (உசா)

கலிநிலைத்துறை.

சத்த மாதரு மந்தடம் படிந்துமா தவந்நாற்
பத்தி யாகர னருளினாற் பெருநலம் படைந்தார்
சித்தர் சாரண ரிராக்கத ரியக்கர்கந் திருவர்
முத்த ராயினா ரந்தடந் தன்னிலே மூழ்கி. (உரு)

அரவ மானது மதுகர மானது மந்தத்
திரிசி ராமலைத் தடத்துமூற் றவந்தினுற் செறிந்து
பரிவி மாதவம் புரிந்தர னருச்சனை பண்ணிப்
பிரிவி லாநிறை காரணந் திபர்பதம் பெற்ற. (உசு)

கழுகு நாயகன் முன்னமத் தடத்திலே கலந்து
முழுகி நாயக னருளினா லருந்தவ முடிந்தா
னழகு நாயகி நாயக னினிதெழுந் தருளி [தான்.
மழைய தாமென வரமெலாம் பொழிந்தனன் மறைந்

எழுவ ராகிய முனிவரத் தடத்திலன் பெய்தி
முழுகி மாதவ முயன்றுநல் லருச்சனை முடித்தார்
விழைவ தேதென வினவினா னரனவர் விரித்தார்
தழுவி மேனியி லடக்கினான் சலந்தனர் தவத்தோர்.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

நன்றுடையா னெனவுலகோ ரெடுத்துரைக்கு மொ
ருதீர்த்த நவமதாக, வொன்றுளதா யிருக்குமது குண

திசையில் விளங்குமதி லுவந்து மூழ்கிக், குன்றுடை பா னடிதொழுவார் பிறப்பகலு மிறப்பகலுங் கொடு மை தீருந், தென்றிசையிற் றீயதிலா னெனுந் தீர்த்த மளிக்குநெடுஞ் செல்வந் தானே. (௩௧)

மனத்தின்வரு வினைகளெலாம் விதிதடத்தா கைநு மன வாக்கினாலே, கனத்தவினை யொழியும்வட திசை யின்வருகங்கையினாற் காயம் வாக்கா, னினைத்தமையா லடைந்தவினை குணதிசையிற் றடமூழ்கி னீங்கு மிந்த, வெனைத்து மகன் றறம்பெருகுந் தீயதிலா னெனுந்தட த்தி னெய்து வோர்க்கே. (௩௨)

தீர்த்தச்சருக்கம் முற்றிற்று.

ஆக சருக்கம் ரு-க்கு திருவிருத்தம-உாசு.

# திருநகரச் சருக்கம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

இக்கதை பலவு முனிவர்தஞ் செவியி லினியவா ரமி ர்தென விசைத்த, மெய்க்கவு தமனை வணங்கிமா தவர்க ள் வினவுவா ரனகமா தவனே, தெக்கண கயிலை மலைசி ரா மலையாந் திருப்பெயர் படைத்திடு சிறப்பை, முக் கண னருளான் மொழிகவென் றுரைத்தார் முனிவனு மவர்க்கிவை மொழிவான். (க)

கலிநிலைத்துறை

முன்பரக்கருர் கதிபதி யிராவணன் முனிவாய்த்
தென்புலத்துறை திரிசிரன் றூடணன் கரனை
யென்பவர்களுந் திறப்பளித் திம்மலை யிடத்தில்
வன்பு பாற்றிய படைகளுந் திடும்படி வைத்தான். (௧)

மணிருந்திறை கொடுமுடி யவன்பெயர் காட்டும
பொருநகு தூடணா றுறையிட மனது பெயராந்
திரிசி ராவதி றுறைதரா திரிசிர மலையா
மிருவர் பேரொழித் தொருவன்பே ராகவே யிலங்கும்.

தூட ணன்கரா னிருவருமிரும்பகை தொலைத்து
விட்டனன்றிருந் தமயனங் கழைப்பவவ் விறலோன
பாட ணைந்தன னிராவணன் றனதறு மதியா
மேட ணைந்ததாற் றிரிசிரன் பின்றுமங் கிருந்தான்.

துண்ட வெண்பிறை முடியனை யநுதினந் தொழுது
மண்ட பங்களு நவமணி குயிற்றிய மதிலுங்
கொண்ட றங்கிய கோபுரச் சிகரமுங் குழுமி
யண்ட ரின்புற மயன்சமைத் திடும்படி யமைத்தான்.

தந்தி யீருரி போர்த்தவற் காலயஞ் சமைத்திட்
டந்த மால்வரைக் கீழொரு வளம்பதி யமைத்து
மந்த ராசல மெனும்படி யரமியம் வகுத்துக்
கந்த மாதன வரையென வெயில்களுங் கண்டான். (௫)

வைய ராமணி கோபுரத் தலந்தொறும் பவளந்
துய்ய நீள்கொடி நிரையென விரித்திடு சுடர்க

ளய ஞெய்யம் வெஞ்செய விறங்குகற் கமார்
செய்ய நாலிறைற் சமைந்திடு மேனிபோற் றிகழும்.

கலிவிருத்தம்.

கொடிச்சிய ரணிமலர்க் குறிஞ்சி சேரளி
யிடைச்சியர் குழற்றள விதழின் மேவுமே
நடைச்சிய ரெறிதரு கரும்பின் முந்திறை
புடைச்செறி கடற்கரைப் புள்ளு நீங்குமே. (௮)

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

பரவைதான் பொய்கை யாகப் பதுமமே
தரணியாக
மரையினு ளிருந்த வெல்லை மற்றுள
தலங்க ளாக
விரைகமழ் பொருட்டு செந்நெல் விளைபழ
நாட தாகத்
திருமக ளாயிந் தோன்றுந் திரிசிராப்
பள்ளி தானே. (௯)

கலிவிருத்தம்.

காமரம்பொற் கன்னி மருங்கெலாந்
தாம ரைக்கிடை தண்கயல் பாயுமே
தேமடுத்த கடைசியர் செவ்விய
மாமுகத்தினும் வாள்விழி பாயுமே. (௰)
ஆறு மேதியு மார்தலி லம்புயம்
பானல் சிந்தும் பரிமளத் தேறலாற்

சோனை போன்முலைப் பாலைச் சொரிதலாற்
றேனும் பாலு மருதத்தண் செய்களே. (௰௩)

கலிநிலைத்துறை.

முத்தி னஞ்செறி தடமொரு நான்கிலு முழுகி
யத்த னின்புற வருச்சனை புரிந்தன னதன்பின்
மெய்த்த வம்பல வியற்றினு னங்கவன் மெலிந்தும்
பத்தி சோதனை யறிந்திட விருந்தனன் பரமன். (௰௪)

இன்ன மென்னெதிர் முன்னவன் றோன்றிடா திருந்த
தென்ன காரண மெனச்சொலித் தன்றலை யிரண்டை
வன்னி மீதரிந் தாகுதி கொடுத்தனன் மற்றைச்
சென்னி தன்னையு மரிந்திடக் கரத்துவாள் சேர்த்தான்.

அனையன் வாளினுல் விரைந்துதன் கழுத்தினை யரியப்
நினையு மெல்லையில் விடையின்மேற் றோன்றினு னிமல
கனக மாமலர் மதுமலர் சொரிந்தினு கரத்தாற் [ற்றி.
புனையு மால்விடைக் கெதிர்நடந் திறைஞ்சினுன் போ

ஐம்மு கத்தனை யறுமுகத் தவனையு மரிய
கைம்மு கத்தவன் றன்னையு மருளிய கனியை
மும்மு கத்தவ னுன்முகன் முதலினோர் முன்னே
யெம்முகத்தினும் பாவினுன் பாவியொன் றிசைப்பான்

நாக நாதனே யுனக்குமிந் நகர்க்குமென் னுமை
மாக வேவரந் தருதியென் றிறைஞ்சினு னவனுக்

கேசநாதனு மப்படி யாகவென் றியம்பி
மாகமீதினில் வலிமழு விடையொடு மறைந்தான். ௰௬

திரிசி ராவுமந் தலத்தினை யகன்றவை தெரியும்
பரிசி ராவணற் குரைத்தகன் றிலங்கையாம் பதியி
லரசு போனபின் கதியடைந் தனனென்ன வறைந்து
முரசி ராகவ னருச்சனை புரிந்தது மொழிவாள். (௰௭)

## திருநகரச்சருக்கம்

முற்றிற்று.

ஆக சருக்கம் ௬-க்கு திருவிருத்தம். ௨௱௨௧

## நினைத்தது கொடுத்த. சருக்கம்.

கலிவிருத்தம்.

நயாதன் மதலையா மிராமன் றுடைகை
தயருறப் பொருதுசா னகியைத் தோய்ந்தபி
னயர்வுறும் பாதனுக் கரசு நல்கியே
கயனுகள் சரயுவைக் கடந்து போயினன். (௧)

சாநகி மயிலுடன் றம்பி தன்னுடன்
கானக மடைந்தொரு கணையி னனுற
மாநக மடந்தைமூக் கரிந்து மாரிச
மானையு மழித்துவா லியையு மோட்டினன். (௨)

விராவுறு கலந்தனைத் தொலைத்து வேலையைத்
தராதர நிரைகளாற் கடுத்துத் தம்பியோ
டிராவண னுயிர்குடித் திலங்கை வாழ்வினைப்
பராவுறு வீடணன் பரிக்க நல்கியே. (௩)

புட்பகத் திவர்ந்துதன் னகர்க்குப் போதுவான்
விட்புலம் படர்தரு பொழுதவ் வெற்பினைக்
கட்புலங் குளிரவே கண்டு போற்றினான்
சட்பதங் குடைநறுந் தாம மார்பினான். (௪)

இழிந்தனன் சிவநதித் தினிது மூழ்கினான்
பொழிந்தனன் பன்மலர்ப் புயலி னீமான
வழிந்தன விழிமழை வணங்கி னான்மிக
மொழிந்தனன் சிவமெனு மூல மந்திரம். (௫)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

பின்வாசி கொண்டசடை யிறைவனே போற்றிசதுர்
வேதமாக
முன்வாசி கொண்டவனே கனலெரிய நின்றாடு
முதல்வா போற்றி
தென்வாசி கொண்டபுரந் திரியநகைத் தருள்பரம
சிவனே போற்றி
பொன்வாசி கொண்டவனே வெள்ளிமலை யுடையானே
போற்றி போற்றி. (௬)

கலிவிருத்தம்.

பூசனை புரிந்தவன் புகழுங் காலையி
லீசனும் பலவர மீந்து போயினான்

கோசல மெனுந் தலங் குறுகி ராகவன்
வாசவன் மகிழ்வுற மகமி யற்றினான். (௭)

ஒருதல மிறந்தவர்க் குறுதி நல்கிடு
மொருதலம் பிறந்தவர்க் குதவு நற்கதி
யிருதலந் தம்மினு மெய்தும் யாவையுந்
தருதல மிதுவலா றாரையி னிலையே. (௮)

நாவலந் தீவிலந் நகரை நண்ணியே
தேவரு முனிவரு நாருஞ் சித்தரு
மாவுடன் பறவையு முரக மாதரும்
யாவரும் பாகதி யெய்தி னார்களே. (௯)

கலிநிலைத்துறை.

ஐந்து பேர்தமக் கொருத்தியே தேவியா மளவில்
வந்து நாரதன் மொழிதரா னெவ்வொரு வருட
மிந்த மாதினைப் புணருமிவ் வியல்புகண் டெதிர்த்தோர்
நந்து பூமியை வலஞ்செயத் தகுமென நவின்றான்.

அன்ன நாளினி லருச்சுனன் றருமனோ டவனைக்
கன்னல் வேளுட னிரதிபோ லிருப்பது கண்டா
னின்ன தீவினைக் குலகினை வலஞ்செய வெண்ணி
மன்னு நாவலந் தீவிலத் திசையிலே வந்தான். (௰௧)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

ஒங்காலை பூசித்த காளத்தி யிறையவனை
யுவந்து போற்றித்

தூங்கானை மாடத்தி லகலாமல் விளங்குபரஞ்
 சுடரை வாழ்த்தித்
தீங்கானை தனையுரித்த வழுவூர னிருசரணஞ்
 சிரத்தி லேற்றிப் [மைப்
பாங்கானைக் காவிலுறை யகிலண்ட வுமையின்றை
 பணிந்து போனான். (௰௨)

கலிநிலைத்துறை.

நரன ருச்சுன னெனும்பெய ருடைய வனன்கா
வரன ருச்சனை புரிந்தன னமலனு மவற்கு
வரம ளித்தனன் மடந்தையர் பலரையு மணந்து
பாக நிப்பய னடைந்தன னெனமுனி பகர்ந்தான்.

அறிந்த பாவமும் வலிகெடு மறிவிலா மையினாற்
செறிந்த வல்வினைக் கடனுமத் தலத்திலே தீரும்
பிறந்த மானிடப் பிறவியிற் பலன்களும் பெறலா
மிறந்த போதினிற் பிறந்தபேர் முத்திபெற் றிருப்பார்.

எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

மனுகு லந்தனி லிரவி புங்கவன்
 மதலை தந்தரு டயரதன்
றனுச னங்கவ னனுச னென்பவர்
 தமது வெம்பகை தவிரவே
கனலி லங்கையி லிடும வன்சொரி
 கருணை யஞ்சனை பாலக

னுறும னென்பவன் மலையில் வந்ததி
லரிய நன்புன லாடினான். (௰௫)

மால யன்றொழு வானை நண்பகன்
மாலை கங்குலின் மாலையா
லால யந்தனின் மேவி மஞ்சன
மாதி கொண்டிடி பேணினான்
வால சந்திர ரேகை தண்புனன்
மாசு ணந்திகழ் வேணியான்
வேலை நஞ்சணி நீல கந்தரன்
மேவி னன்விடை மீதிலே. (௰௬)

குன்றெ னத்தொழு தனும னின்றனை
னிறைய மன்பொடு கூறுவா
னனறு னக்கினி வரம ளித்திட
நவிலு வாயென மொழிகுவா
னென்றன் முத்திரை யுன்றலத்தினி
லெய்த வேண்டுமெ னச்சொனா
னன்ற ளித்தன னரிய செல்வமு
மடைக வென்று மளித்தனன் (௰௭)

---

நினைத்தது கொடுத்த சருக்கம்
முற்றிற்று.

ஆக சருக்கம் எ-க்கு திருவிருத்தம் உ௱சம.

சிவமயம்.

# சாரமாமுனிச் சருக்கம்.



கலித்துறை.

என்று கூறுமுன் கோதம னவன்றனை யிறைஞ்சி
நன்று கூறினை யெனச்சொலி யிருடியர் நவிலவா
மன்று சாரமென் னொருமுனி தவஞ்செய வதிலே
வென்ற வாறெலா முணர்கவென் றனர்முனி செப்பும்.

எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

பரம யோகி யொருவ னுண்டு
பகலின் முன்னு கதிரிலே
பிரம சன்மன் மறைக ளோர்ந்து
மங்க மாறு பேதமும்
கரத லாம லகம தாக
வுணர்வில் வைத்த காரணன்
வரையில் வீறு மிமய மீது
மாத வஞ்செய்தொ டங்கினான். (௨)

அன்ன யோகி யருமை யான
தவமி யற்ற வமலனும்
மின்னு மௌவு குன்ற மன்ன
விடையின் மீது மேவினான்

பொன்று லாவு போது கொண்டு
பரம யோகி போற்றினு
னென்ன வேண்டு மென்ன யோகி
முத்தி வேண்டு மென்றனன். (௩)

இந்த லத்தின் முத்தி யில்லை
யிமய வெற்பக் கன்றுகா
சித்த லத்து றைந்த சோம
சன்ம யோகி தேவி தன்
கைத்த லத்தி லிற்றெ னப்பி
றந்து கண்க ளிக்கவே
பத்தி செய்து நீயு மங்கொர்
பால னாப யந்தபின். (௪)

மனைது றந்து தெற்றி னண்ணி
மலை யுறு காவி ரிக்கணை
யினிது வீறு திரிசி ராந
கர்க்க ணெய்தி யெம்மையே
நனைகு லாவு பாத லத்து
மலர் பறித்து நாடொறும்
புனைதி முத்தி யெய்து மென்று
சிவன்மொ ழிந்து போயினன். (௫)

அடல மைந்த பிரம சன்ம
னரிய யோக முறையினு
னுடலு றந்து சோம சன்மன்
மகிழ வந்து தித்தனன்

புடைநெருங்கு கலனி றைந்த
புணரி பொங்கு மகராமீ
னிடைநெ ருங்கு பால லைக்குண்
மதியெ ழுந்த தென்னவே. (௬)

சோம சன்மன் மனம கிழ்ந்து
செய்க டன்மு லைத்தபி
ஞம நாமி சைக்க வேண்டு
மென்னு மெல்லை நாகமேல்
வாய்மை யொன்றெ ழுந்த திந்த
மைந்தன் பூத வத்தினுற்
றும மார்ப நாமம் வல்ல
சார னென்று சாற்றுமே. (எ)

என்று ரைக்க மனம கிழ்ந்து
தந்தை தாய ரிருவரும்
நன்றி யுற்ற சார னென்று
நாம மன்று நல்கினார்
பொன்ற லற்ற கல்வி கேள்வி
புனித நூலு ணர்ந்தபின்
மன்ற லுற்ற கோதை யோடு
மனைய றத்தில் வைகினான். (அ)

வயந்த புண்ட ரீக யாகம்
வாச பேய மாதிய

வியந்த பன்ம கம்பு ரிந்து
மெய்க்க டன்க ழித்தபி
னயந்து நன்ம கப்ப யந்து
துறவ றத்தை நண்ணினன்
பயந்த பால னினிது தன்கு
லத்து நீதி பயிலவே. (௬௰)

முற்பி றப்பி னியல்ப றிந்த
முனிவில் சார முனிவனுந்
தெற்கி டத்தின் மேவி மிக்க
திரிசி ராம லைக்குள்வாழ்
பர்ப்ப தக்கொ ழுந்த ரான
பரமர் பாத மலரின்மே
லற்புதத்தி னரிய போது
சொரியும் வண்ண மனுகினன். (௬௧)

கலிநிலைத்துறை.

கண்ட மட்டிலே யுருகின னுலயங்கண்டு, கண்ட மட்டிலே விடஞ்செறி கடவுளைக் கமுகார், கண்ட மட்டிலேய் கருங்குழ லிறைவியைக் கண்டான், கண்ட மட்டிலே யடங்கிடா மகிழ்ச்சியாற் களித்தான். (௬௨)

பிரம னாரண னகத்தியன் முதலிய பெரியோர், பரம யோகிய ரிமையவர் பணிந்திடும் பரனே, கரனு மங்கவற் கிளையவ னிருவருங் காண, விரவி போலவந் தரும்பல் முதவிய விறையே. (௬௩)

அறும னென்பவ னருச்சுனன் வணங்கிய வரனே
யினிய மாதர்க ளெழுவரு மிறைஞ்சிய விறையே,வளை
யும வார்குழ லுமையவள் வணங்கிய மணியே, தனிய
யானவர்க் கன்னையே யெனச்சொலித் தாழ்ந்தான்.(௰௩

சிவத ட்ந்திலே மூழ்கிய மலைவலஞ் செய்து
பவம கற்றிடும பொருட்டினி தருச்சனை பண்ணி
நவமு றச்செயும் பன்னசா லையினக நண்ணித்
தவமி யற்றினன் வே ளை சாரனுஞ் சாரன். (௰௪

சாரமாமுனி சருக்க
முற்றிற்று.
ஆக சருக்கம் அ ... திருவிருத்தம்-௨௱௫௪.

# சூரவாதி...ச் சருக்கம்.



கலிவிருத்தம்.

வாழி யந்த வருந்தவ மாமுனி
தாழ்வ ருங்கதை தன்னை நிறுத்தியே
சோழ னவ்விடைத் தோன்றி யதுமவன்
கோழி மாநகர் கண்டதுங் கூறுவாம். (௧

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

மண்ணி லழியாப் புகழ்படைத்த மனுவின் குலத்தி

வண்ணன் மகிழ வவதரித்தா னரசர் சூளா மணியென்பா [டைவா
னெண்ணெண் கலைகண் முழுதுணர்ந்தா னெழுவிற் ப
ளிவைதெரிந்தான்
பண்ணும் பரியும் பரித்தேரும் பகடுஞ் செலுத்தல்
பயின்றனனே. (உ)

அந்த மகனைச் சனகாத வளவன் புட்டிக்
கரசனெனத்
தந்து புலனைந் தையுமடக்கி முயன்முன் யோக
சாதனையை
மைந்த னவனி முழுதினையுந் தளரா தளித்து
மதிக்கவிகை
சிந்து நிழலி னிளைப்பகற்றி நடத்தா நின்றான்
செங்கோலே (௩)

எட்டா னைகளுஞ் சுமைதவிர வுரகா திபனு
மிளைப்பகலக்
கட்டா நின்ற வரியகழல் பகைத்தார் முடியிற்
கதிர்பரப்ப
வொட்டா ரளக்கும் பெருந்திறையா லிமையோ ருலகை
மூடுருவக்
கொட்டா நிற்க முமமுரசும் புரந்தான் மனுவின்
குலமணியே. (௪)

எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

பொங்க லிப்படி யுயிர்பு ரந்தெழு
புடவி தன்னைவ ழுஞ்செய்வான்

சிங்க ளத்தவர் யவனர் பப்பரர்
சீனர் சோனகர் கேரளர்
வங்கர் குச்சரர் கூர்ச்ச ரத்தவர்
கோச லத்தர் வணங்கவே
துங்க பத்திரி தண்பு னற்சொரி
தூய திண்கரை மேவினான். (௫)

கலிநிலைத்துறை.

அம்பை யின்கரை நாதற்கு னடிபணிந் ததற்பின்
ஈம்பை யின்கரை யுமையிடத் திறைவனைக் கண்டு
பம்பை யின்கரை யழகிய நாதனைப் பணிந்து
செம்பொ னம்பல வாணனை வணங்கினான் சிரத்தால்.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

தனுவுருவ மாயிருந்தான் மலர்க்கையின்மான் பயந்தத
லுங் கங்கை யாடன்
மனமுருகி வெதும்புமற்றை மலைமாதுந் தளருமென்
றோ வடிவ மெல்லாம்
புனலுருவ மானவனை யயிர்தகதிர் புனைந்தவனைப் பொ
ருந்துங் கோடி
தினகரனை நிகர்த்தவனைத் திருவரனைக் காவானைச் சேவி
த் தானே. (௭)

வெண்ணுவ னிழலானே யகிலாண்ட நாயகியா மேனை
யீன்ற
பெண்ணுவ லுடனனைக்கும் பெருமானே மாணிக்கப்
பிறங்கல் போலும்

வண்ணுவல் லசுரர்புர மெரித்தானே பெருங்கருணை
வழியா நிற்கு
நண்ணுவல் லணிந்தமிடற் றானேயென் றடிபணிந்து
களித்துப் போனுன். (௪)

வேறு.

பொன்னி கடந்து சிவகங்கை முதலாந் தடங்கள்
புடைசூழ
மன்னி விளங்குஞ் சிராமலையின் சிகரக் கொழுந்தை
மணத்தகுழற்
றன்னி மயிலை விழிகுளிரக் கண்டா னுடலங்
களிப்புற்ருன்
சென்னி வணங்கி யடிபணிந்து நடந்தான் மேலைத்
திசைதனிலே. (௫)

வேறு.

காவல னின்பொடு மேறிசை யின்புடை கானில்
வரும்பொழுதா
மாவுகை யுந்திறல் வீரர்மதங்கய மாவுகை
யுந்தகையோர்
மேவுதல் கண்டெதிர் சீறியு டன்றழல் வேகமி
குந்தலைநேர்
கூவியு கைந்தெதி ராகந டந்தொரு கோழிதொ
டர்ந்ததுவே. (௬)

மேலெழு மங்கிளை யாவிழு மென்சிறை வீசுமி
குந்தெழுகால்

ரோமெழு மிந்திர ஞாலமே னும்படி போய்மறை
யுந்தரைமேல்
வாலைய றைந்திடு மோடிவ ருந்திசை மாறிவ
ருந்தனையே
கோலும்பி ருஞ்சிறை தாமுமு கங்கொடு கோதிவ
ளர்ந்திடுமே. (௰௩)

வேறு.

மரங்களி லொளிக்கு மிள வளையிடைக் குதிக்கும்
வீரர்
சிரங்களை நெருங்கும் வாசித் தலையின்மேற் செறியும்
யானைக்
கரங்களி லிருக்கும் பாகர் கேவசமே லிருந்து
மேலும்
பரந்தனி லுகையுந் திண்டிற் றடித்தெனப் பறந்து
போமே. (௰௪)

மன்னவன் றனையெல்லா மருண்டதி சயிப்ப
வேழச்
சென்னியிற் செறிந்த சென்னி கவிகைமேற் செறிந்த
போது
பன்னிரு கரத்தோன் கோழிப் பதாகையா
னகையாலே
யிந்நில வரசுங் கோழிக் கவிகையா னென்ன
வானான். (௰௫)

வேறு.

கொதியாப் பறந்து கவிகையினுங் குதித்துச் சென்னி குஞ்சரத்தை
யுதையாச் சரண முள்ளழுந்த முதுமுள் ளழுந்த வுள்ளழுந்தப்
புதையாக் குருதி நதிப்படியா மதவா ரணயி னும் பொங்கியது
மதவா ரணத்தைக் கண்டக்கால் விடுமோ மற்ற வாரணமே. (௰௪)

கலிவிருத்தம்.

பார்த்தனர் மன்னரும் படைக்கை வீரரு
மார்த்தனர் படையெலா மதிசயித்தன
கூர்த்திடு கணையயில் பரிசை விற்கொடு
வேர்த்தன ராசனும் விலக்கி னனரோ. (௰௫)

அறுசீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்.

வலத்தினிற் படிந்து மீள விடப்புறம் வளைந்து போந்து
நிலத்திடை நடந்து வான முகட்டிடை நெடிது பாய்ந்து
சலத்தினிற் குதித்து மேகத் தலத்திடை யடங்கி யைந்து
புலத்தையு மடக்கா யோகி மனமெனப் போயிற் றன்றே. (௰௬)

இத்தல வாசியாலிப் பறவைபோ ரிழைத்த தாகு
முத்தம தலம்யா மிங்கே யுறைவது கருமமென்று

வத்தலத் தனந்த கோடி யரமிய மரச வீதி
சித்திர மாட கூடங் கோபுரஞ் செய்வித் தானே. (௰எ)

கலிவிருத்தம்.

மன்னர் வீதி நிறைந்தகை மாவின்மேற்
பொன்னி லாமணிந் தோரணம் பொங்குதன்
மின்னு மேக மிவையென விண்ணவர்
வன்ன வில்லு வளைத்தது போலுமே. (௰அ)

போத கந்தின் மதந்தி போதலின்
மாதர் கண்டு மருண்டு வனமுலைச்
சீத சந்தனத் தாற்களை செய்ததன்
மீது சென்றுநம் வீதி புகுவரோ. (௰கூ)

செம்பொ ருட்குப் பிரிந்திடு செல்வர்க
டம்பு யந்திற் றழுவி மயங்குவா
ரம்பு யத்திரு வன்ன மடந்தையர்
கொம்பு சுற்றுங் கொடிக ணிரக்கவே. (உ௰)

ததைத மாவளை யாடிய தணகழன
முத்தி ராசி புகுந்து முகிற்கிடை
யுய்த்த மாரித் துளியொ டுதிர்ந்திடு
மெத்து மாரி விழுவன போலுமே. (உக)

ஆடு மஞ்ஞை யனைய மடந்தையர்
பாடு மங்கல வள்ளையின் பாடலுந்
தோடு தங்கு சுரும்பெழு சும்மையு
மோடு தேரி னுருளையி னோசையும். (உஉ)

வெங்க ளிற்றின் விரிந்த விரக்கமும்
மைங்க திப்பரி யாலு முழக்கமுஞ்
சங்கொ லிப்பதுந் தாளமி சைப்பதும்
பொங்கொ லிங்கட லேழும் பொருவுமே. (உ௩)

மைய லேற்ற வனங்கொ ளனங்களை
யைய நீக்கி யழைப்பது போலவே
தைய லார்க டமணியத் தாமரைச்
செய்ய பாதச் சிலம்பு புலம்புமே. (உ௪)

வேறு.

பற்றிய படிகமண் டபத்தின் பாங்கரிற்
சுற்றிய மரகதச் சிகரந் தோன்றுதல்
கொற்றமென் கனகபங் கயத்தின் கோல்வளை
யுற்றவு னுறங்கிடு முததி போலுமே. (உ௫)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

நக்கசெங் கமலத் தாது குடைந்ததி
னறவ மாந்தி
யெக்கர்வெண் மணற்குன் றேறி யிருஞ்சிறை
புலர்த்துந் தும்பி
செக்கர்வெண் பிறையை வாட்டுஞ் சிறுநுதன்
மடவார் கொங்கை
மைக்கருங் குவளை மாலை மாலையில்
வைகு மன்றே. (உ௬)

அரவுகொப் புளிக்கு நஞ்சு மமிர்தமு
மொழுகப் பார்வை

முருகுகொப் புளிக்கு முல்லை முகையென
விளங்க மூரா
விரவிகொப் புளிக்கும் வெய்யி லிருகுழை
யெறிப்பச் செங்கைக்
குருகுகொப் புளிக்கப் பந்து பயிலுவார்
கோடி பேரோ. (௨௭)

பொற்கலா பார மின்னப் புணர்முலைக்
கல்லின்க ளோங்க
விற்கைமா ரனையும் விறகும் புருவவில்
விழியம் பேவக்
கற்கொணு மழலை யன்னங் கலாபமா
மயூரஞ் சூழ
நற்கழல் காடிப் பாடு மாதரந்
நகர மெல்லாம். (௨௮)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மூசு வண்டு வாச முண்டு முகிலிடத்து
முரலவே
மாசில் கெண்டை மீனிரண்டு வள்ளை மீது
துள்ளவே
பூசல் கொண்ட வாளி யைந்து பூங்கரும்பு
பொழியவே
யூசலின்க ளாடுகின்ற மாத ரந்த
வூரெலாம். (௨௯)

மழைத வழ்ந்த சிகர கூட மாந கர்க்குள்
　　வைகினு
னழக மைந்த குங்கு மக்கு ழம்ப் ளாவி
　　யறுபதங்
கொழுதி யங்க ராக நுங்கி யங்கை மாதர்
　　கொங்கையா
லுழுத சந்த னந்தி மிர்ந்த வொளிகு லாவு
　　மார்பினன்:　　　　　　　　(கூ௰)

தபன மண்ட லஞ்செ றிந்த சயில மன்ன
　　வொளியதா
மிபம டங்க லெழுது செம்பொ னாச லத்தி
　　லெய்தினு　　　　　　　　　[கை
னபிந யங்கள் பெறுகு ரும்பை யனைய கொங்
　　மங்கைமா
ருபய செங்கை கவரி வீச வூச லாடு
　　தாரினன்.　　　　　　　　(கூக)

கலிநிலைத்துறை.

தோன்று மிக்கதை நிறுத்திமேற் கதையினைச் சொல்கேன், கான்று தேன்கமழ் வாரிசங் குவளைசெங் கழுநீ, ரான்ற சண்பகங் குருந்துமல் லிகைதள வனைத்து, மூன்று காலமு மிறையவற் கணிந்தனன் முனிவன்.

எந்த நாணமக் கிறையவ னருள்செயு மென்றே
புந்தி மேவுற நினைந்துமா முனியுறை பொழுதி

ளைந்து மாமுக னேவலா லழைக்க வந்தஅதுபோன்
மந்த மாருதங் கொணர்ந்தது புதுமலர் மணமே. (௩௩)

இன்ன பூமண மெதுவெனத் தெளிகிலா னிறைவன்
சொன்ன பூமண மிதுவென மனத்திநுற் றுணிந்தா
னன்ன போதினை யரியயற் கரியவற் கணிந்தார்க்
கென்ன பேறரி தென்பெற வருள்செயா னென்றான்.

தாணு வானவற் கிம்மல ரணிந்தவர் தம்மைக்
காண வேண்டுமென் றிருந்தன னவன்றுயில் கனவி
னூண ருமட மாதர்தம் வவ்வெலா நாளை
வேலை வாவினுற் றெளியலா மறைந்து நீவினவில்.

மனதி னெண்ணமு முடிந்திடு மெனச்சொலி மறைந்தா
கனவு தீர்ந்தபி னற்றையின் கடனெலாங் கழித்தா[ன்
னினன கன்றவல் லிருளிலோர் புறத்தொளித் திருந்தா
பனக நாட்டினு மடந்தையர் நடந்தனர் பரவ. [ன்

மண்ணி னிற்சிவ தடத்தொரு பிலத்து நல்வழியா
னண்ணி யற்புத மடந்தைய ரொழுவரு நடந்து
புண்ணி யச்செழும் போதுடன் புகன்றிடு பொருள்க
ளெண்ணி ரட்டியுங் கொணர்ந்துவந் தருச்சனை யியற்றி.

மின்னை நேருவார் வலஞ்செய்து வணங்கினர் மீண்டார்
மன்னு மாதவ னெழுந்தனர் முன்புபோய் வளைத்தாள்
கன்னி மார்களு மதிசய மிதுவெனக் கருதி
யென்ன காரண மிவனமைத் தடுத்தவா றென்றார்.

எண்ணில் காலமா விருட்பொழு திடையிவ ணெய்தி
யண்ண லார்பதந் தொழுதுமீண் டெம்முல கடைவோங்
கண்ணி னுலெமை யொருவருங் கண்டிலாக் காளைப்
புண்ணி யாபுகல் யாவணீ யெனமுனி புகல்வான்.

என்ற னுமமுஞ் சாரனென் றிசைப்பரீ திருக்கச்
சென்று மாதவ ரிருடியர் மானவர்தேவர்
நன்றி யால ருச்சனை புரிவதே நன்மை
யன்றி மங்கைய ரருச்சனை புரிந்திட லாமோ (சுய)

அஞ்சு சுத்தியும் புரிந்துநல் லாகமந் தடைவே
வஞ்சி மங்கையர் பூசனை முடிபபது வழக்கன்
றஞ்ச லிப்பதே கருமமஃ தடுக்கழி வென்று
னஞ்ச கற்றிடு காருட மியற்றிய நாவாண். (சுக)

உத்த மத்தவ னிவ்வணஞ் சொலவவ ருரைப்பார்
பத்தி பெற்றவர் யாவரும் பணியலாம் பரனைப்
புத்த ராவ ரறிந்தது சிலைகொலோ போதோ
முத்தி பெற்றவ னல்லனே வேடனு மொழியீர். ( )

யானை யேமுத லெறும்பது கடையதா வனைத்தும்
வான நாடனை வழிபட வில்லையோ மலரான்
ஞான முற்றவ ரல்லரோ கிரியையி னடப்போ
ரானை யோர்க்கெலாம் பத்தியே மூலமென் றிசைத்தார்.

வீர வேல்விழி மடந்தைய ரிவையெலாம் விளம்பச்
சார மாமுனி மொழிவணீ ருரைத்தது தகவே

யீர வன்பினூர்க் கருளுப தேசமு மெய்திற்
சேரு நன்கனி பாலுடன் கலந்திடு செயலாம். (சச)

பர்வு கூர்விழி விடத்தினூற் கடிதடப் படத்தான்
மருவு நீண்மணிச் சுடிகையா லரவென வரலா
லுரக நாட்டுறை மடந்தையர்க் கொருபுடை யொப்பீர்
தெரிகி லேனுமை யாவர்நீ ரெனவுரை செய்வார். (சரு)

நாக நாட்டுறை யிறையவன் புதல்வியர் நாங்க
ளேக மாகவே யித்தலத் தெழுவரு மெய்திச்
சோக நீங்கிடப் பாதலப் புதுமலர் தொடுத்துப்
பாக வான்மதி முடியவற் கணிகுவோம் பரவி. (சசா)

கலிவிருத்தம்.

தத்துவங் கடந்தவர் தாயி னல்லவர்
பத்தருக் கினியவர் பரம யோகியர்
சித்தருந் கெளியவர் திருவி ருயகர்
புத்திரர்க் கரியவ ரென்று போற்றினூர். (சஎ)

கலிநிலைத்துறை.

அரிவை மீரும தருச்சனை யழகிய ததறகே
குரவர் பானுப தேசமு நலமெனக் கூறப்
பரவி நல்லுப தேசநீ ரருள்கெனப் பகர்ந்தார்
தெரிவை மார்களுக் கருளின னவனுப தேசம். (சஅ)

அடிக ளேயுமக் கடியவர்க் கடியரோம் பதிக்கு, விடை
கொ டேகுவோ மெனச்சொலிப் பதத்தின்மேல் வீழ்ந்

தார், படவ ராவிறை புதல்விய ரொழுவனைப் பார்த்துத்,
தொடர்ப தானதன் பிறவியின்வரவெலாஞ்சொன்னான்.

இற்றை நாளிலென் கனவினி லிறையவ னெய்தி
யுற்ற வுங்களைக் காண்பது முதலெலா முரைத்தான்
சுற்றை வார்குழன் மடந்தையி ரவ்வணங் கண்டேன்
சுற்ற மாயினீ ருமக்குநங் கருத்தினைச் சொல்கேன்.

பாத லத்தினீர் கொணாந்தவிப் புதுமலர் பலவும்
பூத லத்திலே கொணர்ந்துநல் லருச்சனை புரியி
னேத மற்றிடு முத்தியா மெனவிறை யிசைத்தா
னாத லிற்புது நாண்மலர் வேண்டினே மதற்கா. (ருக)

உங்க ணாட்டின்யாம் வருகுவோம் வருந்திற முரையீர்
தங்க நாட்டியீ ரிறத்தினீ ரெனச்சொன்ன றவத்தோ
னெங்க ணாட்டினீர் வருகுவ தரிதரி தென்றார்
கொங்கை நாட்டமெய் யிரண்டினுங் கொலைசெயுங் கொடியார்.

பிலமே தாம்வழி யுலகெலாங் கடிவிருட் பிழம்பு
விலகொ ணாநதி யாவது மாசுண விடநீ
ரிலகு மன்னனைக் காணவு மருமையுண் டெவர்க்கு
மலரு மக்குவந் தெய்துமோ வருமையோ வறியோம்.

என்று கூறினார் யாவையு மிறையவ னியற்கை
யன்றி வேறிலை யடியவர் நினைவெலா மளிப்பான்
சென்று போதுமென் றுரைத்தனன் யோகியர் திலக
னன்று நீரொழுங் கருள்கவென் றவருமுன் னடந்தார்.

சிவத டக்கரைப் பிலவழி முனியுடன் சென்று
தவமு தற்றனை யொருபுடை நிறுத்தியே தந்தைக்
குவகை யுற்றிடத் தவமுனி வரவினை யுரைத்தார்
பவம கற்றினுன் றனையழை யெனவவர் பணித்தார்.

வந்த மாதவ முனிவனைத் தவிசின் மேல் வைத்திட்
டெந்த மாதவ மியற்றினே னீர்வரவென்று
னந்த மாதவ னுரைசெய்வா னுலகமா மனைத்து
முந்து மல்விகை யரும்பென முடித்திடு முதலே. (நுசு)

வைய முண்டவன் றன்னையுந் தாங்கிடு மணியே
யையு னுடலை விழியினு ளருந்துநல் லமிர்தே
மெய்ய தாகவே வியாகர ணங்களை விரித்தோ
யுய்யு மாறினை யடைந்தன னெனவவ னுரைப்பான்.

வந்த காரியம் யாதென வுரைசெய்வான் மணச்செவ்
வந்திமாமலர் வேண்டியே யிவ்விடை வந்தே
னெந்தை யாயரு ளென்றன னெழுவரு மிசைத்தார்
தந்தை பான்முனி பிறப்புமற் றவன்செயுந் தவமும்.

மாத வத்தனே நறுமலர்ப் புதலைமண் ணுடனே
கோத கற்றியே கொண்டு போதுக் வெனக்கொடுத்திட்
டாத வற்கிணை யானசெம் மணிகளு மளித்து
மேதி னிக்கணே யருச்சனை புரிகென விடுத்தான்.

தன்க ணங்களிற் சிலர்தமை யழைத்திவர் தமக்குப்
பின்பு சென்றிடு மெனச்சொ னவருடன் பெயர்ந்து

மின்கு லாவமு னடந்துநீள் பிலவழி மீண்டு
வன்பி லாமுனி யவையெலாங் கோமின்முன் வைத்தான்

கலிவிருத்தம்

வரமுனி கொணர்ந்தசெவ் வந்தி மாமுத
றாணியுந் தாணியிற் றருதல் வேண்டியோ
விரிசதிர்க் கரங்களை யூன்றி மேற்றிசை
யிருளுறு பாதலத் திறங்கி யிட்டதே. (சுக)

முகிழ்நகை யிளமுலை முளரி வாண்முகப
புகரயில் விழியினார் புலவி நீங்கினார்
மகிதல மிசைந்துசெவ் வந்தி வந்ததென்
றகிலமு நிறைந்துசெவ் வந்தி யானதே. (சுஉ)

மேனிறை கங்குலின் விரிந்து வெள்ளிய
பானிறை யுடுக்கணம் பலவுந் தோன்றுதன்
மாநிலம் பாதலமுலைக் காட்டுமுன்
வானமுங் காட்டிய வாறு போலுமே. (சுரு)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

அட்டமா நாகந் தம்முட் குணதிசை
யரவந் தங்க
விட்டமா மிறைவ னீந்த புதன்மல
ரெடுக்கும் போது
கொட்டியே பழுது பார்த்துக் குயிற்றெனக்
கொடுத்த வெள்ளித்
தட்டமா மென்னக் கீழ்பாற் சந்திர
னுதயஞ் செய்தான் (சுச)

கலிநிலைத்துறை.

கோத்த நித்தில மணியென மதியுடன் குழுமிப்
பூத்த மீனெலா மகன்றன விடிந்தது பொழுது
வாய்ந்த மாமுனிக் குதவியாய் மகபதி வகுத்த
வேற்ற மானதிங் பதலைபோற் கதிரவ னெழுந்தான்.

அந்த வேலையி னொருமொழி யுரைசெய்வா னமல
னிந்த நற்புதன் முதலையிவ் விடத்திலே யிசைத்தா
லந்த நற்புத லொன்றுநூ றனந்தமாய் வளரும்
புந்தி யுற்றநம் மடியர்கைத் தானமே போல. (சுசு)

கலிவிருத்தம்.

அம்மொழி கேட்டபி னதனை யாங்கவன்
மெய்ம்மலை மேற்றிசை யடைய வித்தினு
னம்முத லனந்தமா யரும்பி யெங்கணுங்
கொய்மலர் விரிந்துதேன் கொப்பு ளித்ததே. ( )

சிவதடப் புனலினுற் றெளிந்த போதுகொய்
துவகையிற் சங்கநீ ரொருங்கு வீசியே
தவமுனி யனுதின மிறைக்குச் சாத்தினன்
கவலையும் பாவமுங் கரந்து போயவே. (சுஅ)

பொறைநிறை தவமுனி புனைந்த தாரினு
லிறுகணி முடிப்பிறை யழுக்கு பெற்றது
மறுவற வளர்ந்தசெவ் வந்தி மாலையாற்
பிறையொளி விடுவது பேச வேண்டுமோ. (சுகூ)

கலிநிலைத்துறை.

சார மெய்ந்தவன் கதையினை யிடையிலே தடுத்துப்
பார முற்றதோர் கதையினை யுமக்கு நாம் பகர்வோஞ்
சூர வர்க்கனென் றியற்பெயர் படைத்திடு சோழன்
றார ணிக்கெலா மன்னைபோன் முன்னவ தரித்தான்.

ஏழு மாமுழ வாரணத் துச்சிமே லிருந்தோன்,
வாழி குக்குட முயர்த்தொரு மயின்மிசை வருவோ
னூழி மாதவ னெனவுயி ரனைத்தையு மளித்துக்
கோழி மீதினி லிருந்தனன் பெரும்புகழ் குயிற்றி.

அந்த நாளிலோர் தினத்திலே மிருகயாத் திரைக்கு
வந்து கானகத் துலவிநற் றிரிசிரா மலையின்
முந்தி யேகினன் பின்னருஞ் சாரமா முனிவன்
கந்த மார்வனத் தருகினுந் திரிந்தனன் கங்குல். (எ௨)

ஏக வீரனும் வேட்டைகொண் டுலவுமவ் விரவி
னேக கன்னிய ரொருவரு மவ்விடை நடந்து
பாக நாரிய னருச்சனை புரியமுற் படியே
சோக நீக்கிடு சிவதடங் குடைந்தனர் தொகையாய்.

கலிவிருத்தம்.

யுவதியர் கோதையி லொழுகு தேனினு
லவரவர் கயல்விழி யஞ்ச னத்தினுற்
குவிமுலை யெழுதிய குங்கு மத்தினுற்
சிவதட முழுவதுஞ் சேறு பட்டதே. (எ௪)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

வேட்டைமேல் விருப்ப மாகிக் கனைமிசை
யுலவும் வேந்தன்
கோட்டுவார் முலையார் மூழ்கிக் குளித்திடுஞ்
செயலை நோக்கி
நாட்டமா யிரங்கள் வேண்டு மெனச்சொலி
நைந்தான் பின்னைக்
காட்டுமான் கவர்வான் மின்னார் கலையெலாங்
கவர்ந்து போனான். (௭௫)

ஆயமங் கையர்க ளீரொண் ணாயிர
ரன்று வைத்த
தூயமென் கலையை வாரி யொளித்தவச்
சனே போலச்
சேயமென் கலைக ளெல்லாஞ் சிருட
னெடுத்துக் கொண்டு
மாயமோ வென்ன மற்றோ ரிடத்திலே
மறைந்து நின்றான். (௭௬)

கலிநிலைத்துறை.

கன்னி மார்களு மூழ்கிவந் தேறினார் கரையிற்
பொன்னின் மேகலை சொரிந்தன பதத்தின்மேற் புனலை
யன்ன மாதரைச் சிவதடப் புனலெனை யகலா
தின்னும் வாருமென் றழைத்தடி பணிந்ததா மெனவே.

வைத்த வெல்லையிற் றேடினார் கலைகளை மாறு
ரித்த டக்கரை யெய்தியார் கவர்ந்தவ ரென்றார்

சத்தயம் மிவை கவர்ந்தபோர் தாம்விடத் தழலுக்
கொத்த விந்தன மாவரோ வெனச்சொலி யுளைந்தார்.

இன்று பூசனை விலக்கிய பாவியிங் கெவுமன
வென்று கூறிநொந் திரங்கின ரவர்களுக் கெதிரோ
குன்று போலிறை நடந்தனன் மடந்தையர் கூட
நின்ற மாசுண மிறைத்தன விடங்களா நெருப்பை.

கடுவி றைத்திடு கனலெலாங் கருடமந் திரத்தாற் [ன்
பொடிப டுத்திநன் புனலிடைப் புகுந்தவன் போன்று
படவை யொப்பெனும் விடத்தினை கருடமந்திரத்தாற்
றடைப் டுத்தி னிவனெவ னெனவதி சயித்தார்.

ஓதி மம்பொரு நடையினர் பயந்துநின் றுரைப்பா
ராதி மன்னனீ பென்பதுன் வடிவின லீற்றோம்
பேதை வஞ்சியர்க் கிடர்விளைத் திடுவரோ பெரியோர்
நீதி யல்லவு நல்லற மல்லவு நினைந்தாய். (அக)

அலைவ கற்றுவ வுயிரினுக் கழகினை யளிப்ப
வுலகி னுக்கெலா முதவிய மகிழ்ச்சியை யுடைய
கலையெ னப்படு மறுபத்து நாலையுங் கடந்தோ
யிலகு மெங்கலை பறிப்பது நீதியோ வென்றார். (அஉ)

தூம முண்டிருண் டலைதருங் குழலியர் சொல்ல
வூம னென்னவே யுரைசெயா தேகின னூரவோன்
றாமே வேலினன் வீரவேள் சூரவா தித்த
நாம னுடிது வல்லவோ வென்றுபி னடந்தார். (அங)

# செவ்வந்திப் புராணம்.

சூர வர்க்கனு மொழிகுவான் மடந்தைகாள் சொன்ன
பேசொ மக்குள தூமக்குநா னிழைத்தது பிழையோ
வேசொ டுத்தசீ ரொழுவரி லொருவனை யிசையுங்
கார ணத்தினுன் மனறந்துநான் வாரினேன் கலையை.

அன்ன தாகுமென் றவரவர் கலையெலா மளித்துச்
சொன்ன போததற் குடன்படா தவர்களுஞ் சொல்வார்
மன்ன நீயெமைத் தந்தைதாய் கொடுத்திட வனையா
தின்ன வாசகம் பகருவ ததுபழு தென்றார். (அறு)

அரவ நாட்டவர் கடற்புவி யரசருக் காமோ
விருவோ நேர்விட மயிர்துடன் சேருமோ வென்று
ராச னேனுவா னுரகநாட் டவர்மணி யன்றோ
விரவி போலஒிவம் முடியின்மே லிருக்கும தென்றான்.

உங்க ணாட்டிறை யருளினு லுங்களை வரைதற்
கெங்க ணாட்டினின் றும்முடன் வருகுவே னென்றான்
செங்க ணாட்டிய மலரொலாஞ் சிவனடி சேர்த்துத்
தங்க ணாட்டினி லணுகினு ராசனுந் தாமும். (அஎ)

சூதடுத்தபூண் முலையினர் தாதையைத் தொழுது
பாத லத்துநின் பெருமையும் வளமையும் பார்க்கப்
பூத லத்தினே ராசனீங் கணைந்துபூம் பொழிலின்
மீத டுத்தன னெனச்சொல விறைவனும் வியந்தான்.

ஆயி ரம்பணு டவியினன் வருகவென் றருள
வாயி லாளருங் கொணர்ந்தனர் மனுகுல மணியைப்

# சூரவாதித்தசருக்கம்.

கோயில் வாயிலைக் கடந்தவ னவையிடங் குறுகித்
தூய தாண்மிசைப் பணிந்தன னழகுபேற் றுளுப்ப.

அகில மன்னனும் வளவனை யணைந்துவந் தருளி
மகர நான்முகத் தவிசின்மே லமைவுற வைத்துப்
புகரி லின்னமிர் தளாவிய பனிமொழி புகன்றான்
சகல பாரமு மொருவனுந் தலைமிசைந் தரிப்போன்.

அனைய வாசக மவன்சொல வரவநாட் டரசே
புனையு நின்னெழில் காணவும் புகழவும் புகுந்தா
லுனது கண்கள்போ லாயிரத் திரட்டிக னுளவோ
வினிய நாவுமப் படியெனக் குள்ளவோ வில்லையே.

ஊர்ப ரிப்பவர் நாட்டினை யளிப்பவ ருங்கின்
சீர்ப ரிப்பவர் சிறுபுக ழனந்தமாய்ச் சிறக்குந்
தார்ப ரிப்பது நிகரொள மலரினுன் சமைத்த
பார்ப ரிந்துநின் றளிக்குநின் றகைமையார் பகர்வார்.

அன்ப னேயென மொழிந்தனன் மொழிந்தவற் கனந்த
வின்ப மாகவொன் றுரைசெய்வா னெமதுநா டெங்கு
முன்பு கார்விட நிறைந்ததிப் பொழுதுநின் மொழியாற்
றுன்ப நீங்கியின் னமிர்தமா யினதெனச் சொன்னான்.

விடைகொ டுத்தனன் வளவனும் பெயர்ந்தொரு வீதி
யிடைவ குத்ததோர் மாளிகைத் தவிசின்மே லிருந்தான்
படைம ணிக்கல மமிர்தம்வெண் சாமரம் பளிதந்
தொடைம லர்க்குலஞ் சந்தனம் விடுத்தனன் [illegible].

இந்தி ரன்பெருஞ் செல்வமா மெனுமவை யெல்லா
மைந்து தன்பு*) ஞரவே மகிழ்ச்சியா லயின்முன்
வந்து கங்குலுங் கழிந்தது மற்றைநா ளனந்தன்
முந்து பேரவைக் கெய்தின னனந் நனு மொழிவான்

அந்த வாரிதி யுலகினு மிறங்கியிங் கருகில்
வந்த காரிய மெதுவென வுரைசெய்வான் வளவன்
முந்து நல்வினை கொணர்ந்தது முனிக்குரீ தருஞ்செவ்
வந்தி நின்புகழ் போலவே விளைத்தது மண்ணில்.

இன்னு மெங்களுட் டில்லன விரண்டுள குளத்துச்,
செந்நெல் வெற்றிலை யெனச்சொனன் மொழிகுவான்
சேடன், மன்னா மன்னவெம் மிடத்தினிற் சிறிதுநா
ள் வைகின் மின்ன ரேகுனக் கவையெலாந் தருகுவோ
ம் பெரிதும். (கூஎ)

ா திருக்கவென் னுயிர்க்குயிர்த் துணைவனீ யென்றே
யோதி யிப்படி மகிழ்ந்திடு நாளிலே யொருநாள்
பூதலத்திலுன் சேனையெத் தனையுளைப் புணரு
மாத ரெத்தனை பெயரென வுரைசெய்வான் வளவன். ()

ஓங்கு நாறகட லுடுத்தபா ருலகமென் னுலகங்
நீங்கி லாதவை நிறுத்திவெம் பகையெலாந் தீர்த்துத்
தாங்க வேண்டிய தெத்தனை யத்தனை தானை
பூங்கை மாதரு மிருவரொன் மனத்தினைப் போல்வார்.()

காடு நாடெலாஞ் செந்நெலும் பூகமுங் கரும்புங்
கோடு முத்தமுங் கமலமு நிறைந்திடுங் குளங்கள்

## சூரவாதித்தசருக்கம்.

மேடை யெங்கணு மிரதிபோன் மடந்தையர் விநோத
மாடல் பாடலுண் டமரர்தே வாலய மனைத்தும். (ா)

மந்த ராசல மெனப்பல களிற்றினம் வயங்குஞ்
சந்த ருடைவித் தலையிலே தடைபடுந் தபனன்
அந்த ரானன மடந்தைய ரணிமணித் தொழையா
லந்த காரமு மிலையவர்க் கரியது மிலையால் (ாக)

பன்ன சாலையு மறையவர் வேள்வியும் பயிலு
மன்ன தானமே முதலிய தானமு மகலா
மன்ன ரோமுதற் குடிகளும் பலவுள மகவான் [யின்.
பொன்னி னுடைனப் பொன்னிநா டுளதொரு புடை

அங்க திற்கம லாலயம் வேதவா ரணியுங்
கங்கை சுற்றிய வம்பல மம்பர்மா காளம்
புங்க நற்பதி புகலிவெண் காடரன் புகலூர்
மங்க லக்குடி கஞ்சனூர் சேய்ஞலூர் வழுவூர். (ாங)

வையை யென்றொரு நதியதன் கரையிலே மதுரை
மைய னீக்கிய தலமிரா மீச்சுரம் வடக்கே
யையன் வைகிய வதிகைதென் கோவலூ ரருணை
துய்ய கம்பையிற் காஞ்சியென் றொருதலந் துலங்கும்.

கச்சி மாநகர் தனக்குநேர் வடக்கிலே காசி
பச்சி மத்திலுங் குணத்திலு மருங்கிலும் பலவுண்
டச்சு தன்குகன் கோயிலு நதிகளு மனந்தங்
குச்ச ராதியே முதலிய தேசமுங் கோடி. (ாரு)

